# அனுபவ வைத்திய முறைகள்



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 230

# அனுபவ வைத்திய முறைகள்

பதிப்பாசிரியர்கள் :

**டாக்டர் T. V. வரதராஜன், D.A.M.**

ஆராய்ச்சியாளர்

மைய ஆயுர்வேத, சித்த மருத்துவ ஆராய்ச்சிப் பகுதி,

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

&

**புலவர் ச. திலகம், B. Litt.**

தமிழ்ப்பண்டிதர்,

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்.

2005 விலை : ரூ. 30

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : அனுபவ வைத்திய முறைகள் |
| பதிப்பாசிரியர்கள் | : டாக்டர் T. V. வரதராஜன், D. A. M., புலவர் ச. திலகம், B. Litt. |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : 230 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : மூன்றாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2005 |
| தாள் | : TNPL 17.8 kgs. |
| நூல் அளவு | : 21 x 14 c.m. |
| பக்கங்கள் | : 88 |
| படிகள் | : 1000 |
| எழுத்து | : 12 |
| அச்சிட்டோர் | : சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : மெலிந்த அட்டை |
| பொருள் | : மருத்துவம் |
| விலை | : ரூ. 30 |

# வெளியீட்டாளர் முகவுரை

சரசுவதி மகால் நூலகத்தின் தமிழ்ப்பிரிவு ஏட்டுச்சுவடி எண். 67 ஆகவுள்ள அனுபவ வைத்திய முறைகள் எனும் சுவடியின் அச்சு நூல் பதிப்பான இந்நூல் நம் நாட்டு பாரம்பரிய மருத்துவத்தின் பல்வேறு சிறப்புக்களை எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது. 180 வகையான மருத்துவ முறைகள் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. இரண்டாம் சரபோஜி மன்னர் காலத்தில் தஞ்சை அரண்மனையில் இருந்த மருத்துவ விற்பன்னர்களால் அனுபவ ரீதியாக கண்டறியப்பெற்ற மரபுவழி மருத்துவ முறைகளே இந்நூலில் பேசப்பெறுகின்றது.

நசிய மருந்துகள், எண்ணெய் வகைகள், சூரணங்கள், கஷாய முறைகள், லேகியங்கள், மருத்துவ நெய்கள் என பலவகையான மருந்து தயாரிப்பு முறைகளை இந்நூல் எளிதாக விளக்குகின்றது. மூன்றாவது பதிப்பைப்பெறும் இந்நூலினை மருத்துவர் டி. வி. வரதராஜன் என்பவரும், சரஸ்வதி மகால் தமிழ்ப்பண்டிதர் புலவர். ச. திலகம் அவர்களும் ஏட்டுச்சுவடியில் இருந்து பதிப்பித்துள்ளனர்.

பதிப்பாசிரியர்களையும், இந்நூல் வெளிவர பெரிதும் துணைநின்ற நூலக நிருவாக அலுவலர் திரு. ஆர். சுப்பிரமணியன், வெளியீட்டு மேலாளர் முனைவர் குடவாயில் பாலசுப்பிரமணியன் மற்றும் நூலக அச்சகப் பிரிவு பணியாளர்கள் ஆகிய அனைவரையும் பாராட்டுகின்றேன்.

நூல் வெளிவர நிதி நல்கிய நடுவண் அரசுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**மா. வீரசண்முகமணி,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும் இயக்குநர்

தஞ்சாவூர்.
*10-5-2005*

# பதிப்புரை

சரசுவதி மகால் நூலகத்திலுள்ள சித்த மருத்துவச் சுவடிகளுள் சிறப்புடையனவற்றை நூல வடிவில் வெளியிட்டு வருகிறோம். அனுபவ வைத்திய முறைகள் என்ற நூல் சித்த மருத்துவ நூலாகும். 1986இல் இது வெளிவந்தது. இப்போது இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பெறுகிறது.

அண்மைக் காலத்தில் சித்த மருத்துவ ஆராய்ச்சி பல்கி வருகிறது. சரசுவதி மகால் நூலகத்தில் சித்த மருத்துவத் துறை ஒன்று தனியாக அமைக்கப்படவுள்ளது. தகுதி வாய்ந்த பிற சித்த மருத்துவ நூல்களையும் வெளியிடத் திட்டமிட்டுள்ளோம். சித்த மருத்துவ ஆராய்ச்சியளர்கள் சரசுவதி மகால் நூலகத்துடன் தொடர்புகொண்டு சித்த மருத்துவப் பிரிவுக்குத் தங்கள் பங்கினை அளிக்க விரும்புகின்றோம்.

இந்நூலில் பல்வேறு நோய்களுக்கு அனுபவ மருந்துகள் கொடுக்கப்பட்டுள்ளன. மருத்துவரின் உதவி கொண்டு தனிப்பட்டவர்களும் இந்த மருத்துகளை முறைப்படி தயாரித்து நோய்களைப் போக்கிக் கொள்ளமுடியும்

இந்த நூலை வெளியிடப் பொருளுதவி நல்கிய நடுவண் அரசுக்கும் மிகக்குறுகிய காலத்தில் அச்சிட்டுத் தந்த சிதம்பரம் கஜேந்திரா அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றிகள் உரியன.

**மு. சதாசிவம்,**
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகச் சங்கம்

தஞ்சாவூர்
31-12-89

# PREFACE

This book entitled Avubhava Vaidya Muraigal (Practical Siddha medicines) is one of the important works on Siddha medicines preserved in this library. Practical methods of preparing various diseases are enunciated in this book. the original stanzas are in verse form. Elaborate explanations have been provided by the editors.

This book will serve as one of the most indispensable handbooks for the practising Siddha doctors. Comments on this book are welcome from the experts in the field.

We thank the Central Government for releasing liberal grants for publishing this book and the Gajendra Printers. Chidambaram for their printing work, at a short period.

**M. SADASIVAM,**
Director,
Sarasvati Mahal Library Society.

Thinjavur
31-12-1989



# வெளியிடுவோர் முகவுரை

தஞ்சை சரசுவதி மகால் நூலக வாயிலாக வெளிவரும் "அனுபவ வைத்தியம்" என்ற இந்நூலில் கூறப்பட்டுள்ள மருத்துவ முறைகள் தொன்று தொட்டு, நம் முன்னோர்களால் பின்பற்றப்பட்டவைகளாகும். இருமல், சுவாசகாசம், வாதம், சூலை போன்ற நோய்களுக்குச் சுமார் 180 மருந்து முறைகள் இவற்றின் செய்முறைகள் புதுமையாகவும், எளிமையாகவும் மக்களால் சுலபமாகக் கையாளக் கூடியதாகவும் உள்ளன.

தஞ்சையில் ஆட்சி செய்த மராத்திய மன்னர் இரண்டாம் சரபோஜி (கி. பி. 1798-1832) தன்வந்திரி மகால் என்ற வைத்திய ஆய்வுக் கூடத்தை நிறுவி, இந்திய வைத்தியம் சிறப்புற்று விளங்கச் செய்தவர். அவர் தம் அரிய தொகுப்புக்களிலிருந்து சரபேந்திர வைத்திய முறைகள் என்ற வரிசையிலும், சரபேந்திர வைத்திய ரத்னாவளி, சரபேந்திரர் சித்த மருத்துவச் சுடர் முதலிய தலைப்புகளிலும் சுமார் 25 வைத்திய நூல்களை நூலகம் வெளியிட்டுள்ளது. அன்னார் தொகுத்து வைத்த சுவடிகளின் விவரப் பட்டியல் தயார் செய்வதும், அவற்றிலுள்ள இதுவரை வெளிவராத நூல்களைப் பதிப்பித்து அச்சிடும் அரும்பணியினையும் நூலகம் செய்து வருவது யாவரும் அறிந்ததே. அத்தொகுப்பிலிருந்து தமிழ்ப்பிரிவுச் சுவடி எண். 67 என்ற சுவடியிலிருந்து 'அனுபவ வைத்திய முறைகள்' என்ற இந்நூல் வெளிவருகிறது. இந்நூல் இந்திய மருத்துவத் துறையில் ஈடுபட்டுள்ள ஆய்வாளர்களுக்கும், மருத்துவர்களுக்கும் உதவியாய் அமையுமென நம்புகிறோம்.

இதனை நன்முறையில் சுவடியினின்று வகுத்தெழுதிப் பதிப்பித்துக் கொடுத்துள்ள டாக்டர் டி. வி. வரதராஜன் அவர்களுக்கும், இந்நூலகத்தில் தமிழ்ப்பகுதியில் பணியார்ரும் தமிழ்ப்பண்டிட் புலவர் ச. திலகம் அவர்களுக்கும் எமது பாராட்டுக்கள். இந்நூலை விரைவில் செம்மையுற அச்சிட்டுக் கொடுத்த தஞ்சை ஜெமினி அச்சகத்தாருக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் வெளிவர நிதியுதவி வழங்கிய நடுவண் அரசுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இங்ஙனம்,

**து. இரா. இராமசாமி**, இ. ஆ. ப.,
மாவட்டாட்சியர் மற்றும் இயக்குநர்,
சரசுவதிமகால் நூலகம்.

தஞ்சாவூர்
11-1-1986



# முன்னுரை

நம் பாரத தேசத்தில் தொன்று தொட்டு விளங்கிவரும் இந்திய மருத்துவங்களான ஆயுர்வேதா, சித்தா மற்றும் யுனானி மருத்துவ முறைகள் நம் மக்களுக்குப் பயன்பட்டு வருகின்றது. பொதுவாக இந்திய மருத்துவத்தில் சித்த, ஆயுர்வேத மருத்துவங்கள் ஒன்றுக்கொன்று அதிக வேறுபாடு இல்லாமல் பிணைக்கப்பட்டு வந்துள்ளன. சித்த மருத்துவம் திராவிட தேசத்தில் அதிகமாக வழக்கத்தில் உள்ளது. வடதேசத்தில் ஆயுர்வேத மருத்துவம் அதிகமாக வழக்கத்தில் உள்ளது.

ஆயுர்வேதமும், சித்தமருத்துவமும் அடிப்படைத் தத்துவங்கள் ஒரேமாதிரியானவை. யுனானி வைத்தியம் சற்று வேறுபட்டது. சித்த ஆயுர்வேத முறைகள் பஞ்சபூதம் அதாவது பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் இந்த ஐந்தாகும். இந்த ஐந்தும் கெட்டுப் போகும் பொழுது உலகத்தில் இருக்கும் அனைத்து ஜீவராசிகளுக்கும் கெடுதல் விளைவிக்கின்றன. உலகத்தில் எறும்பில் தொடங்கிப் பெரிய விலங்கான யானை முடிய எல்லா ஜீவராசிகளும் பஞ்சபூதத்தினால் ஆனவை. குறிப்பாக மனித வர்க்கத்தைப் பார்க்கும்பொழுது பஞ்சபூதங்கள் கெட்டுப் போகும் நிலையில் மனித தேகத்தில் உள்ள மூன்று தோஷங்களான வாதம், பித்தம், கபம் இம்மூன்று தோஷங்களும் படிப்படியே கெட்டுப்போய் மானிட தேகத்தில் வியாதியை உண்டுபண்ணுகின்றன. ஆகையால்தான் நம் இந்திய மருத்துவங்களான சித்த, ஆயுர்வேத மருத்துவங்களுக்குத் தனிச்சிறப்பு.

தற்காலத்தில் ஆங்கில மருத்துவம் இன்று அதிகம் மக்களால் விரும்பப்பட்டு வரும் நிலையிலும் கூடத்

தொன்றுதொட்டுவரும் நம் மருத்துவங்களான ஆயுர்வேத, சித்த முறைக்கு நல்ல பிரகாசம் இருந்துகொண்டு வருகின்றது. காரணம் ஒரு ஆங்கில மருந்து ஒரு வியாதிக்குக் கண்டு பிடிக்கப்பட்டு, பல ஆண்டுகளான, பின்பு அதே மருந்து மானிட தேகத்தில் உயிரை மாய்க்கும் தன்மையை உண்டாக்குகிறது. ஆனால் தொன்றுதொட்டு வரும் நம் மருத்துவத்தில் உள்ள மருந்துகள் இன்றும் ஒரே மாதிரியான தன்மையுடையதாக இருந்துகொண்டு வருகின்றன. இதற்குக் காரணம் இந்திய மருத்துவங்களான திரிதோஷ, (பஞ்சபூத திரீதான்) இந்த திரீயானது நம் உலகம் அழியும் வரையில் மாறாது.

ஏதாவது ஒரு தோஷம் ஒருவனுக்கு அதிகம் இருந்தால் அந்தத் தோஷத்திற்கு நல்ல மருத்துவர்கள் நாடிப் பரிசோதித்து எந்தத் தோஷம் சோபித்துள்ளதோ அதற்கு மருத்துவம் செய்கிறார்கள். ஆகையால் கொஞ்சம் அதிகமான காலமானாலும் அந்த வியாதி திரும்ப வருவதில்லை. இது எல்லோரும் கண்ட உண்மை. இத்துணைச் சிறப்பு வாய்ந்த நம் மருத்துவத்தை நம் தேசத்திற்கு அர்ப்பணித்த மகரிஷிகள், சித்தர்கள் அனேகம் பெயர்கள் உண்டு. பொதுவாக சித்த மருத்துவத்தில் அகத்தியர், போகர் மற்றும் பல சித்தர்கள் தமிழில் நமக்குப் பல பாடல்களாக எழுதி வைத்துள்ளனர்.

ஆயுர்வேத மருத்துவத்தைச் சரசு, சுச்ருதா, வாக்படா மற்றும் அனேக மகரிஷிகள் வடமொழியில் நமக்கு எழுதி வைத்திருக்கிறார்கள். இந்த இரண்டு மருத்துவங்களும் தற்பொழுது பல புத்தகங்களாக நம்மிடையே பழக்கத்தில் உள்ளன. இதைத்தவிரப் புத்தக வடிவில் இல்லாத நல்ல மருத்துவங்கள் ஓலைச்சுவடியிலே உள்ளன. இதைச் சேகரித்த தஞ்சை மன்னர் மராட்டிய மன்னரான சரபோஜிதான். இவர் பாத யாத்திரையாகக் காசி வரையில்

சென்று ஆங்காங்கே உள்ள பேர்பெற்ற மருத்துவர்களைச் சந்தித்து அவர்களிடம் விவாதித்து, அவர்களைத் தஞ்சை அரண்மனைக்கு அழைத்து, அவர்களை நன்கு உபசரித்து அவர்களிடம் உள்ள மருத்துவச் சிறப்புகளைச் சுவடியில் எழுதி வைத்து அதில் உள்ள மருத்துவ முறைகள் மக்களுக்குப் பயன்படும் வகையில் மருத்துவச் சாலையும், மருத்துவமனையும் (தன்வந்திரி மகால்) நிறுவி இவர் எழுதியுள்ள பிரயோகம் அனைத்தையும் உபயோகிக்கச் செய்து நல்ல மருத்துவ முறைகளை மட்டும் பாதுகாத்து வைத்துள்ளார். ஆகையால்தான் இன்றும் சரசுவதி மகாலில் மத்திய அரசாங்கத்தாரால் ஆயுர்வேத, சித்த மருத்துவ ஆய்வு மையம் நடந்து வருகிறது.

இங்குச் சுவடியில் உள்ள மருத்துவ முறைகள் தற்போது பயிலும் மருத்துவ நூலில் இல்லாதது சிறப்பாகும். இந்த அரிய பொக்கிஷத்தைக் காப்பாற்றிய மன்னர் சரபோஜிக்கு நன்றிக் கடப்பாடு உடையவர்களாவோம்.

தற்போது இந்தப் புத்தகம் மகாலில் உள்ள தமிழ் பகுதியில் மருத்துவப் பிரிவில் உள்ள சுவடி எண். 67-ஐக் கொண்டதாகும். இந்த "அனுபவ வைத்திய முறைகள்" என்ற நூலில் தொடக்கத்தில் சொல்லியபடி பலவிதமான முறைகள் கூறப்பட்டுள்ளன. பல மருத்துவ முறைகள் பாடல் வடிவத்தில் இருந்தாலும் வசன நடையில் கூறப்பட்ட மருத்துவ முறைகளையே தொகுத்துத் தரப்பட்டுள்ளன. உதாரணமாக சூலைக்கும், காச சுவாசத்திற்கும் கூறப்பட்டுள்ள மருந்துகளும், செய்முறைப் பயிற்சியும் நன்றாக உள்ளன. இதைத் தவிரப் பல புதுமையான பிரயோகங்கள் உள்ளபடியால் இதை வைத்தியர்களுக்கும், மருத்துவ ஆராய்ச்சித் துறையில் உள்ளவர்களுக்கும் பயன்படும் என்ற முறையில் இதைப் பதிப்பித்து உள்ளோம்.

இந்த நல்ல மருத்துவ நூலைப் பதிப்பிக்கும் பணியை, எங்களுக்கு அனுமதித்த இந்நூலக இயக்குநரும், மாவட்ட ஆட்சியருமாகிய திரு. து. இரா. இராமசாமி, அவர்களுக்கும், இந்நூல் பதிப்பாகப் பலவகையிலும் அனுமதி வழங்கி உதவி புரிந்த இந்நூலக நிருவாக அதிகாரி (பொறுப்பு)யுமான திரு. அ. பஞ்சநாதன், M.A., B.Lib. Sc., அவர்களுக்கும், நூலை விரைவாக வெளியிட அச்சிட்டு உதவிபுரிந்த தஞ்சை, ஜெமினி அச்சகத்தாருக்கும் எங்களது மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றோம்.

இங்ஙனம்,

டாக்டர் T. V. **வரதராஜன்,** **D. A. M.,**
ஆராய்ச்சியாளர்,
மைய ஆயுர்வேத, சித்த மருத்துவ ஆராய்ச்சிப் பகுதி,
சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்.

புலவர் ***ச. திலகம்,*** **B. Litt.,**
தமிழ்ப்பண்டிட்,
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்.

தஞ்சாவூர்
2-1-86



# இந்நூலில் அடங்கியுள்ள வியாதிகளின் அகர வரிசைப்பட்டியல்


| | பக்க எண் |
|---|---|
| அரிதாரச் சிந்தூரம் (சிறுநீர் கழிய) | 66 |
| ஆனி இருமலுக்கு மருந்து | 59 |
| இருது சூலைக்கு எண்ணெய் | 26 |
| இருமலுக்கு | 47, 48, 49 |
| இருமலுக்கு, சளிக்கு நசியம் | 66 |
| இருமல ஈளைக்கு (வேறு) | 53 |
| இளைக்கும் இருமல் ஈளைக்கு ராகாவடிவு | 51 |
| இருமல் இளைப்புக்கு மருந்து | 55 |
| இருமல் ஈளை தீபனத்துக்குத் தாளீச பத்திரி கிருதம் | 66 |
| இருமல் இரைப்புக்கு தூதுவிளம் நெய் | 59 |
| இருமலுக்கு உருண்டை. | 52 |
| இருமலுக்கு எண்ணெய் | 61 |
| இருமலுக்கு கஷாயம் | 50 |
| இருமல் காயா சுவாசத்துக்கு எண்ணெய் வகை | 55 |
| இருமலுக்குக் குடிநீர் | 48 |
| இருமலுக்குக் கையாந்தகரை எண்ணெய் | 54 |
| இருமல் தீர இன்னமொரு வகை | 52 |
| இருமலுக்குத் தேத்தா நெய் (வேறு) | 54 |
| இருமலுக்குத் திப்பிலி நெய் | 64 |
| இருமலுக்குப் புகை | 56 |
| இருமலுக்கு புகை உண்ணத் தீரும் | 58 |
| இருமலுக்கு நாக சிந்தூரம் | 64 |
| இருமலுக்கு நாசியாலே இரத்தம் விழுகிறத்துக்கு மருந்துப்புகை | 56 |
| இருமலுக்கு நெய்க்கடுகு | 57 |
| இருமலுக்கு மருந்து | 47, 48, 51, 53, 54, 65 |
| இருமல் முதலானதுக்கு நாகபற்பம் | 47 |
| இருமல் வாந்திக்குப் பேராமட்டி நெய் | 58 |
| இருமலுக்கு லவங்காதிச் சூரணம் | 47 |
| இரைப்புக்கு | 47 |
| இரத்த காசத்துக்கு | 44 |
| இரைப்புக் கஷாயம் | 47 |
| ஈளை இருமலுக்கு | 61 |

ஈளை இருமல் சுவாசகாசம் தீரச் சிங்காதிச் சூரணம் 51
ஈளை இருமலுக்கு ஆடாதொடை நெய் 64
ஈளை இருமல் இளைப்புக்கு மருந்து 62
ஈளை இருமல் முதலானதுக்குத் திரிபலாதி கிருதம் 52
ஈளைக்கு 59, 63
ஈளை இருமல், அருப்பு, அருவிருப்பு, சுவாசகாசம் உட்பட்ட வியாதிக்கு 64
ஈளை இருமல் மந்தாக்கினிக்கு 62
ஈளைக்கு நெய் 63
ஒருத் தலைவலிக்கு 17
கபத்துக்கும், சுவாசத்துக்குஞ் சூரணம் 70
கபரோகத்துக்கு சூத்ராயயாதி லேகியம் 69
கபால சூலை, தலைவலி, பிடரி கனப்பு ஒருத்தலைவலிக்கு 17
கரச்சூலை கருக்காயம் 23
காசத்துக்கு 42
காச சுவாசத்துக்கு 32
காயா சுவாசம் இளைப்பு, இணைப்பு, பீனிசம் இதற்கு லேகியம் 35
காச சுவாச கிருதம் 32
காச சுவாசங்களுக்குத் திப்பிலியாதிரசாயனம் 35
காச இருமலுக்குத் தூதுவளை எண்ணெய் 28
காச சுவாசம் பாண்டு காமாலை உள்பட்ட வியாதிக்கு தாளீச வடகம் 31
காச ரோகத்துக்கு பாவநாச அரிதார கடுக்காய் 42
காச சூலைக்குக் கஷாயம் 24
காச சுவாச முள்பட்டத்துக்கு தசமூல நெய் 30
காச முதலான ரோகத்துக்குப் பூஷணிநெய் 42
காச ரோகத்துக்குச சண்ட மாருத லேகியம் 43
காச சுவாச முதலான பலரோகத்துக்கு குண்டலியாதி லேகியம் 28
காயா சுவாசத்துக்கு பூஷணி நெய், விக்கல் காச ரோகத்துக்கும் 35
குன்ம சூலைக்கு 14
குன்ம சூலைக்கு மெதுக் கொள்ள 17
குலைப்புக்கு 63, 64
கெந்தகச் சூரணம் 20
சகலமான சூலைக்கு லசுநாதி ஏரண்டத் தயிலம் 6
சருவ சூலைக்கும் இங்குவாதிச் சூரணம் 4
சுவாச காசத்துக்கு மருந்து 29,30,32,41
சுவாச காசத்துக்குக் குடிநீர் 32

சுவாச காசத்துக்குத் தாளீச மாத்திரை 39
சுவாச காசத்துக்குக் குக்குலாதி மாத்திரை (வேறு) 40
சுவாச காசத்துக்குச் சண்முகரசம் (வேறு) 41
சுவாச காசத்துக்குக் குண்டலியாதி லேகியம் 36
சுவாச காசத்துக்கு அஷ்த்திசுரத்துக்கு இருமலுக்குத் தாளீச சூரணம் 29
சுவாச காசத்துக்குத் தாளக பற்பம் 29
சுவாச காசத்துக்குப் பஞ்ச கோலாதிச் சூரணம் 38
சுவாச காச முதலஆனதுக்கு நிரா அபையரதி லேகியம் 33
சுவாச காச சேத்துமத்துக்குத் தேட்கடை நெய் 33
சுவாச காச சேத்துமத்துக்குத் தேட்கடை நெய் (வேறு) 34
சுவாச காச இருமலுக்கு மருந்து 28
சுவாச ம முள்பட்டதுக்கு மூல நெய் 30
சுவாச ரோகத்துக்கும் விளங்காதி சூரணம் 38
சுரகாசத்துக்கும், வியத்துக்கும் திப்பிலி நெய் 46
சிலேட்டுமத்துக்கு மருந்து 69
சிலேட்டுமம் இருபதுக்கும் பெயர் 68
சிலேட்டும ரோகத்துக்கு நெய் பண்ணும்படி 68
சூலை ஒட்டிய புண் முதலானதுக்குப் புகை மருந்து 18
சூலைக்கு உருண்டை 4
சூலை 9-க்கும் பல வியாதிக்கும் கருங்கோழிச்சூரணம் 2
சூலைக்கு மருந்து 1,7,9
சூலைக்குப் புகை மருந்து 7,10
சூலைக்குங், கடுப்புக்கும் எண்ணெய் வகை 13
சூலைக்கடி மருந்து 12
சூலைக்கட்டுக்கு 5
சூலைக்கட்டுக்குத் தயிலம் 7
சூலைக்கட்டுக்குச் சடாரசபற்பம் 8
சூலைக்கட்டுக்குக் கைகால் குடைச்சலுக்கு மருந்து 24
சூலைக்கடுப்புக்கு 11
சூலைக்டுப்புக்குத் கெந்தகத் தயிலம் 11
சூலைக்கடுப்பு, இடுப்பு வலி முதலான வியாதிக்குப் பறங்கிப்பட்டைச் சூரணம் 27
சூலைக்கஷாயம் 1
சூலைக்குடாரம் 12
சூலைக்குன்மங்களுக்குப் பாவட்டை எண்ணெய் 16
சூலைரோகத்துக்கு அபயாதிச் சூரணம் 5

| | |
|---|---|
| சூலைவாய்வுக்கு மருந்து | 25 |
| சூலை வியாதிக்குச் சுரசம் | 5 |
| சூலை முதலான ரோகத்துக்கு | 5 |
| சூலை முதலான ரோகத்துக்கு அரிதாரச் செந்தூரம் | 4 |
| சேற்றுமத்துக்கு | 68,69,70,71 |
| சேற்றும விகாரங்களுக்கு நெய் | 67 |
| நிதம்ப சூலைக்கு மருந்து | 23 |
| பஞ்சாக்கினி சூலைக்கு | 13 |
| பக்க காசத்துக்கு | 44 |
| பக்கங்கள் எடுத்துப் போடும் இருமலுக்கு மருந்து | 60 |
| பக்க சூலைக்கு | 21 |
| பக்க சூலை வாய்வுக்குக் கெந்தகச் சூரணம் | 22 |
| பயித்திய காசத்துக்கு எண்ணெய் | 45 |
| பித்த காசத்துக்கு வில்வாதி லேகியம் | 46 |
| புண்ணுக்கு, சூலைக்கு ரசப்பொடி | 10 |
| மண்டை சூலைக்கும், காமாலைக்கும் மருந்து | 18 |
| மந்தார காசத்துக்கு, எலிக்கடிக்கு, இரைப்புக்கு மருந்து | 45 |
| மந்தாரகாசம் முதலானதுக்கு அரிதார பற்பம் | 46 |
| மருத்தீட்டுக்கும் பாதறவற்றின இருமலுக்கும் | 65 |
| முடங்கு சூலைக்கு மருந்து | 25 |
| வாத சூலைக்கு சந்து வாத கரப்பானுக்கு வேது பிடிக்க | 20 |
| வாத சூலைப்புண், ஆறாதபுண், கடிவிஷம், பிளவைக்கு | 20 |
| வாதசூலை முதலானதுக்குக் கெந்தகச் சூரணம் | 20 |
| வாயினாலேயே இரத்தம் விழுந்தால் | 44 |
| வெள்ளைப்பொடி 18-காசத்துக்கும் பல நசலுக்கு மருந்து | 27 |
| வெள்ளை வாகடத்தில் சூலைக்கடுப்புக்கு பரங்கிப் புண்ணுக்கு | 25 |
| யோனி சூலைக்குச் சூரணம் | 24 |




# அனுபவவைத்திய முறைகள்

### 1. சூலைக் கசாயம்

சங்கங்குப்பி இலை
மிளகு
கலைமான்கொம்பு
சுக்கு
வெள்ளை வெங்காயம்
பெருங்காயம்

இவை சமங்கிஷாயம் வைத்துக் கொடுத்தால் சூலை ரோகம் தீரும்.

### 2. சூலைக் கசாயம் (வேறு)

ஒரு தலை வெள்ளைப்பூண்டு
முருங்கை வேர்ப்பட்டை
திப்பிலி மூலம்
வசம்பு
பாவட்டை வேர்
சுக்கு

இவை சமங்கிஷாயம் வைத்துக் கொடுத்தால் சூலை தீரும்.

### 3. சூலைக்கு மருந்து

| | |
|---|---|
| நாபி | சாதிலிங்கம் |
| வெள்ளைபாஷாணம் | அரிதாரம் |
| கெவுரிபாஷாணம் | சீனக்காரம் |
| வங்காளப் பச்சை | நெடிநமச்சாரம் |
| தொட்டிப் பாஷாணம் | யவச்சாரம் (இவட்டசாரம்) |

| | |
|---|---|
| மிருதார் சிருங்கி | காரீயம் |
| அஞ்சனக்கல் | கொட பச்சை |
| கருங்குங்கிலியம் | ஈயம் |
| காந்தம் | ரசம் |

இவை சமன் விராகன் 1, எருக்கம் பால் வார்த்தரைத்து ஒன்பது பங்கிட்டு எருக்கம்பால் சீலையில் சுருட்டிப் புளியஞ்சிராய்த் தணலில் புகை போடவும். ஒரு நாள் ஆற வைத்து 5-ஆம் நாள் விளக்கெண்ணை வார்த்து முழுகவும். நீர்ச்சோறு, பிறகு நெய்த்தோல் கருவாடு, சுறாக் கருவாடு, வெள்ளாட்டு உப்புக்கண்டம் கூட்டிக் கொள்ளவும். இதற்குத் தீரும் வியாதி சூலை, ஒட்டிய புண், வாத சூலை, அண்டவாதம், சருவாங்க வாதம், திமிர் வாதம், வெண்குட்டம், கருங்குட்டம் மண்டைசூலை, செவ்வட்டைக்கடி, சீக் கட்டினது, தண்டுப் பிளவை, காணாக்கடி இவை தீரும்.

### 4. சூலை ஒன்பதுக்கும், பல வியாதிக்கும் கருங்கோழிச் சூரணம்

முத்தக் கோழிதனைப் பிடித்து
  முதுகைப் பிளந்து கடுகுப்பு
ஒத்தக் காயம் யெண்கழஞ்சு
  உழக்கு மிளகு வெள்ளுள்ளி
பத்தி இடித்து அதுக்குளிட்டுப்
  பகரும் பானையில் மேல் வைத்து
சுத்திக் கட்டிப் பானையிற்குள்
  சொல்லும் மருந்துநீர் கேளீர்.

### 5. லசுன பீஷ்ட்டி லேகியம் சூலை முதலான ரோகத்துக்கு

மாவிலங்குப் பட்டை
புரசம் பட்டை
அகில் பட்டை
மூக்குறட்டை வேர்
வில்வவேர்

வகைக்கு இரண்டு பலம், இருபதுபடி தண்ணீர்விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி இறுத்து இதில் வெள்வெங்காயம் பலம் முப்பது உரித்து நல்லெண்ணையில் வறுத்து அரைத்து கஷாயத்தில் போட்டுக் காய்ச்சிக் குழம்பாய் வருகிறபோது.

| | |
|---|---|
| சுக்குப்பலம் | 2½ |
| திப்பிலிப்பலம் | 2½ |
| மிளகுபலம் | 1 |
| அரிசித்திப்பிலிப்பலம் | 1 |
| நறுக்குமூலம் | 6 விராகனிடை |
| வெண்காரம் | 6 விராகனிடை |
| கடுக்காய் | 6 விராகனிடை |
| அரத்தை | சித்திரமூலத்தோல் |
| சதகுப்பை | கூனாத்திப்பட்டை |
| இந்துப்பு | செங்கத்தாரிப்பட்டை |
| செவியம் | சாக்ஷுத்திரவேதி |
| சீரகம் | கற்கடசிங்கி |
| கருஞ்சீரகம் | கூகை நீர் |
| மரமஞ்சள் | வாய்விளங்கம் |
| விளாவரிசி | நவட்சாரம் |
| சீனிக்காரம் | தகரம் |
| சடாமாஞ்சில் | அதிமதுரம் |
| ஏலம் | இலவங்கப்பட்டை |
| சிலாசித்து | மிளகரனைப்பட்டை |
| நாயுருவிவரிசி | சிறுதேக்கு |
| வெள்ளைப்போளம் | கற்பூரசிலாசித்து |
| திப்பிலிமூலம் | சாதிப்பத்திரி |
| இரும்பு | வளையலுப்பு |
| கடுகு ரோகிணி | கடுகு |

இவ்வகைக்கு விராகனிடை நாலு, சூரணம் பண்ணிக் கொதிக்கிற வெங்காயக் குழம்பில் தூவிக் கிளரி காலை,

மாலை இரண்டு விராகனிடை சாப்பிடப் புளித்தேப்பம், நெஞ்செரிப்பு, சூசிகா குன்மம், மார்வலி, நிதம்பச்சூலை, ருத்திரசூலை நாபிச்சூலை, உதரச்சூலை, சூசிகா சன்னி, தலைவலி, வேர்வை, மூர்ச்சை, வாதம், சிலேட்டுமம், சூசிகா சுரம், மயக்கம், கைகால் சிறுத்தல், மலசலபந்தம், உப்பிச மேல் சுவாசம், அதிசாரம், குடல்வாதம், வீக்கம், உதிரவாய்வுக்கட்டி, இரத்தக்கட்டி, மேகரோகம், வாதரோகம், விரணங்களெல்லாந்தீரும்.

### 6. சருவ சூலைக்கும் இங்குவாதிச் சூரணம்

பெருங்காயம்
இந்துப்பு
திப்பிலி

இவைகளில் ஓரொன்று கழஞ்சு கடுக்காய் இரு கழஞ்சு இவைகளைச் சூரணம் பண்ணி வெந்நீரில் கொள்ளச் சறுவ சூலையுந் தீரும்.

### 7. சூலை முதலான ரோகத்துக்கு அரிதாரச்செந்தூரம்

அரிதாரம்பலம் - 1

பொரசம் பட்டை அரைத்துக் குகைபிடித்து அதற்குள்ளே வைத்துப் புரசம்பட்டை அரைத்ததைக் கொண்டுமூடி சட்டியில் வைத்துச் சட்டி கொண்டு மூடிச் சட்டிவாயைச் சீலைமண் செய்து அடுப்பில் வைத்து நாலுசாமம் எரியிடச் செந்தூரமாம். ஒரு பணவிடை தேனிலிடச் சூலைப்புண், குடோரம், கடிவிஷம், குஷ்டம், பல் வியாதியும் தீரும்.

### 8. சூலைக்கு உருண்டை

| | |
|---|---|
| வசம்பு | பெருங்காயம் |
| கோரைக்கிழங்கு | சுக்கு |
| கழற்சிக்கொட்டைப்பருப்பு | இந்துப்பு |
| மிளகு | வெள்ளுள்ளி |

இவை சமபாகம் எடுத்து எலுமிச்சசம்பழச் சாற்றால் அரைத்துப் பிரமாணமாய் உருண்டை செய்து சாப்பிடச் சூலைகள் தீரும்.

### 9. சூலைக்கடுப்புக்கு

| | |
|---|---|
| வெள்ளுள்ளிச் சாறு | ஆழாக்கு |
| இஞ்சிச்சாறு | ஆழாக்கு |
| முருங்கையிலைச் சாறு | ஆழாக்கு |
| பெருங்காயம் | விராகனிடை¾ |

ஆக மருந்து நாலுங்கூட்டிக் கொடுக்கவும். சூலைக் கடுப்புச் சீராகும். கை கண்டது.

### 10. சூலைக்கட்டுக்கு மருந்து

| | |
|---|---|
| வெள்ளுள்ளிச் சாறு | ஆழாக்கு |
| இஞ்சிச்சாறு | ஆழாக்கு |
| முருங்கையிலைச் சாறு | ஆழாக்கு |
| பெருங்காயம் | விராகனிடை¾ |

ஆக நாலு மருந்துங்கூட்டிக் கொடுக்கவும். சூலைக் கட்டு குணமாம். கை கண்டது.

### 11. சூலை வியாதிக்குச் சுரசம்

சங்கம் வேர் சீவி எலும்பிச்சங்காயளவில் பசுவின் பாலிலரைத்து இருபது நால் குடிக்கச் சூலை வியாதி தீரும். உப்புப், புளி ஆகாது.

### 12. அபயாதிச் சூரணம் சூலைரோத்துக்கு

நெல்லிமுள்ளி, வாய்விளங்கம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, ஏலம், கோரைக்கிழங்கு, சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய், இவை சமபாகம் இவைக்கு மூன்று பங்கு, சிவதைச் சூரணம் சேர்த்து எல்லாமிடித்துச் சூரணஞ்செய்து இவை சமபாகஞ் சர்க்கரை சேர்த்துப் பிரமாணமாய்

வெந்நீரிலே போட்டுச் சாப்பிடச் சூலைகள் அக்கினி மாந்தியம், மூலம் வாத பித்த கபங்கள் இவை தீரும்.

### 13. லசுநாதி ஏரண்டத்தயிலம் சகலமான சூலைக்கு

வெள்ளைப்பூண்டு துலாம் - 1

தண்ணீர் மரக்கால் - 2 கூட விட்டு நாலிலொன்றாய்க் காய்ச்சிக்கொண்டு அதை வடிகட்டிப் பெரிதாயிருக்கிற தாம்பிர பாத்திரத்திலே விட்டு ஒரு மரக்கால் ஆமணக்கெண்ணை கூட விட்டு இந்துப்பு, திரிபலை, திரிகடுகம், வாய்விளங்கம், தேவதாரம், கோட்டம், பொன் முசுட்டை, வசம்பு பெருங்காயம், கொடிவேலி, வெட்பாலை, அதிவிடையம், ஓமம் யானைத்திப்பிலி, சிறு தேக்குச் சௌவச்சலவணம், புளி, அம்ளவேதசம் இவை வகை ஒன்றுக்குப் பலம் ஒன்று, சிவதை,வேர்ப்பலம் 6. இவை எல்லாம் இடித்துச் சூரணம் பண்ணி எண்ணையில் சேர்த்து மிருதுவாய் எரித்துப் பக்குவமாய் இறக்கிக் கொண்டு அவன் சத்துவத்துக்குத் தக்கதாய்க் கொடுக்கச் சகலமான சூலைகள், மகோதரம், மூத்திரக் கிரிச்சம் உதாவந்தம், பாரிச சூலை, வயிற்றுவலி, மார்புவலி, ஆமசூலை, அரோசிகம், வயிற்றுக் கட்டி, குன்மம், வயிற்றுப் பொருமல், மூல ரோகம் வாதமெண்பது இவை தீரும்.

### 14. சூலை கடுப்புக்குத் தயிலம்

புங்கெண்ணை படி - ¼
வேப்பெண்ணை படி -¼
வெள்ளுள்ளித் தயிலம் படி - ¼
திருகுக் கள்ளிப் பால் படி - ¼
எருக்கம்பால் படி - ¼
கொடிக்கள்ளிப்பால் படி - ¼

இதுவும் எண்ணையுங் கூட்டி நீர்வத்த வெந்த பிறகு

பாஷாணம்
நொச்சிலை ரசம்
சீரகம்
இந்துப்பு
மிளகு
அரிதாரம்

இது வகைக்கு விராகனிடை ½ எலும்பிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து மூன்று எருக்கிலையில் தடவித் தயிலத்துடன் போடவும். இலைகருக வெந்தால் கிண்டிக் கலசத்திலூற்றிக் கொள்ளவும். ஒரு கொதிக்குப் பிறகு வலிகண்ட விடத்திலிடப் பிடிக்கவும். சன்னி வாதம் என்பதுந் தீரும்.

### *15. சூலைக்குப் புகை மருந்து*

ரசம் விராகனிடை - 4
வெள்ளீயம் விராகனிடை - 7

திருகுகள்ளி வேர் விழுது அரைச்சுப்போட்டு, எருக்கம்பால் விட்டு, அரைத்து உருண்டை பண்ணவும். பத்தியமும் 3 நாளைக்கு பத்தியமாயிருப்பது. 3 நாளைக்கு பாகற்காயில் புளியும், உப்பிட்டுக் கரி பண்ணவும்.

### *16. சூலைக் கட்டுத் தயிலம்*

விழிசமூலம் கொண்டுவந்து இலைதள்ளிச் சிறுக நறுக்கி ஒரு பாண்டத்திலிட்டுத் தயிலமிறக்கி வைத்துக் கொண்டு பொரிமாவில் பிசறி வெருகடிப்பிரமாணஞ் சாப்பிடவும். சரீரத்திலும் போட்டுப் பிடிக்க, பசுவின் தயிருஞ் சாதமும் போட்டு 5 நாள் உப்புப் புளி தவிர்க்கவும். சூலைக்கட்டுத் தீரும்.

### *17. சூலைக்கு மருந்து*

சுடு துரத்தி வடக்கே போகிறவேர் வெட்டி வந்து அந்தப் பட்டையைத் தட்டிக் கொட்டைப் பாக்களவு பசுவின்

பால் விட்டரைத்துக் கொடுக்கவும். இதற்குப் பத்தியம் ஒன்றும் ஆகாது. பசுவின் மோர் விட்டுச் சாப்பிடவும்.

### *18. வேறுமுறை*

ரசம் விராகனிடை 10 கொண்டு வந்து கொட்டைக் கரந்தைச் சாரு விட்டுப் 15 நாழிகை அரைத்து மெழுகு போலே திரட்டி வைத்துக்கொண்டு கொட்டைக் கரந்தை அரைத்துக் கைய்த்தடி அப்பம் அரைத்த மருந்துக்குக் கவசங் கட்டி ஏழு சீலை மண் செய்துகுக்குடப்புடம் போட்டு எடுத்துக் கொண்டு தினமொரு ஏழு நாள் கொடுக்கவும். பத்தியம் உப்பு, புளி தவிரவும்.

### *19. வேறுமுறை*

| | |
|---|---|
| சித்தாமணக்கெண்ணெய் | கடுகு |
| கழற்சிப் பருப்பு | வாய்விளங்கம் |
| பெருங்காயம் | செவ்வியம் |
| சுக்கு | மிளகு |
| இந்துப்பு | திப்பிலி |
| வெள்ளுள்ளி | திப்பிலி மூலம் |

இவையெல்லாம் பொடி செய்து முடிகொற்றான் இலைச் சாறும் ஆமணக்கெண்ணையும் சமனாகக் கூட்டிக் காயவைத்து அந்த மருந்துப் பொடி தூவித் துளாவி கடுகு பண்ணிக்கொள்ள சறுவ சூலையும் நிற்கும்.

### *20. சூலைகட்டுக்குச் சடாரசபற்பம்*

*சாதிலிங்கம் பலம் - 4*

திராவகம் வார்த்தரைத்துச் சட்டியிற் போட்டு மேற்சட்டி கவிழ்த்து ஒன்பது நாழிகை கமலம் போலே எரிக்கவும். இப்படி ஏழுதரம் எரிக்கவும். அதை எடுத்துக் கிரந்திப்புண்ணுக்கு, சூலைக்கட்டு இதற்கெல்லாங் கொடுக்கத் தீரும்.

## 21. சூலைக்கு மருந்து

| | |
|---|---|
| புளியஞ் சிராய் சுட்ட சாம்பல் | பெருகு |
| சங்கு சுட்ட சாம்பல் | புளி |
| பஞ்சலவணம் | தடலை |
| சத்திட்சாரம் | மருள் |
| எவட்சாரம் | காட்டுக்கறணை |
| பிரண்டை | கறிக்கறணை |

இவை ஆறுவகைக் கிழங்கும் கொடிவேலி வேர்ப்பட்டை இவைகளெல்லாங்கூட,

| | |
|---|---|
| சுக்கு | - 8 பலம் |
| மிளகு | - 1 பலம் |
| திப்பிலி | - 1 பலம் |
| பெருங்காயம் | - 1 பலம் |
| இரசம் | - 1 கழஞ்சு |
| கெந்தகம் | - 1 கழஞ்சு |
| தாம்பூரபற்பம் | - 1 கழஞ்சு |
| நாபி | - 1 கழஞ்சு |

இந்தப்படி எல்லாஞ் சேர்க்கக் கூட்டி, எலுமிச்சபழச்சாறு விட்டரைத்து இலந்தைக் கொட்டைப் பிரமாணம் குளிகை பண்ணி உலர்த்தி பஞ்சகவ்விய கிறுதத்திலே ஒரு குளிகை காலமே கொள்ளச் சூலைகள் சகலபுண்கள் வல்லை, அகுவை பீலிகை, ஆனாகம், பெருவயிறு, நீர்க்கோவை, கல்லடைப்பு, மூத்திரகிருச்சம், அஜீரணம், மூலவியாதிகள் தீரும்.

### இன்னுமொன்று அனுபானம் :

பரங்கிப்பட்டை
ஓமம்
அமுக்கிரா வேர்
வெள்ளுள்ளி

சரிகூட்டி கஷாயமிட்டு இதிலேயும் கொடுக்கவும்.

**பத்தியம் :**

நெய், பசுவின்பால் ஆட்டுப்பால் இதிலே வெள்ளுள்ளி விட்டுக் காய்ச்சிப் பத்தியமிடவும்.

### 22. புகை

| | |
|---|---|
| சுத்தியான இரசம் | - நாற்பது பணவிடை |
| காரீயம் | - முப்பது பணவிடை |

ஈயம் கரண்டியிலிட்டு உருகி வருகிற முகத்திலே இரசமிட்டு எடுத்து,

| | | |
|---|---|---|
| வெள்ளைப்பாஷாண | 1 | விராகனிடை |
| அரிதாரம் | 1 | ,, |
| மயில் துத்தம் | 1 | ,, |
| கெந்தகம் | 1 | ,, |
| குங்கிலியம் | 2 | ,, |
| மிளகு | 2 | ,, |
| கடுகு | 2 | ,, |

எருக்கலம் பத்து விராகனிடை சேர ஒன்றாகக் கூட்டிப் பருத்தியிலைச் சாறுவிட்டு நன்றாக அரைத்து 9 உருண்டைபண்ணிப்பொழுதைக்கு ஒரு உருண்டையாகப் புளியஞ் சிராய் தணலிலே புகைப் போகாமல் மூடிப் புகைக்கவும். ஆள் பலமறிந்து ஒன்பது, ஏழு புகைக்கவும். புகை கொள்ளு முன்னே மோர், தயிர் வார்த்து அசனம் பண்ணின பிறகு புகைக்கவும்.

வாயிலே சூலை கட்ட வேண்டாமென்ற பேருக்கு இரச சீலை இரண்டு மடிப்பாக மடித்து வாய், கண், மூக்கு கட்டிப் புகையிடவும்.

### 23. புண்ணுக்கு, சூலைக்கு ரசப்பொடி

இரசம் சுத்தியானது. களஞ்சு இரண்டு பச்ச வெற்றிலைச் சாற்றில் முறிச்சு உழக்கரிசி குறுவை அரிசி நனையத் தக்கது. பச்சை வெற்றிலைச் சாறு விட்டு, இரவு முழுவதும் நனைய

விட்டு விடி வேறு அதில் இருந்த சாறு ஊற்றி, ஈரம் உலர நிழலுலர்த்தி மூவிலை முன்னியைக் கூட்டாமல் மற்ற மின்னி இலையைக் கூட்டி ஒரு பிடி முசுமுசுக்கை இலை ஒரு பிடி பச்சை வெற்றிலை எட்டு, ஒன்பது இதுகள் செருக்கு வாடப் போட்டு எடுத்து இலையும், அரிசியுமிடித்து மாவான பக்குவத்திலே இரசம் விட்டு, ஒரு சாமம் இரண்டு உலக்கை போட்டு, கை ஓயாமல் இடித்து, மாவைப் புதுக் கலசத்திலிட்டு நிழலுலர்த்தி நாளொன்றுக்குக் களஞ்சிப் பிரமாணம் எடுத்து பசுவின் தயிரால் விட்டு, மூன்று உருண்டை உருட்டி 7 நாள் இந்தப் படியே கொள்ளவும். பத்தியம் தயிருஞ் சோறுமல்லாமல் வேறொன்றுமாகாது. வயிற்றில் இரத்த வேகத்தைத் தாக்கி ரத்தங் கழிஞ்சால், தயிரிலே வெல்லம் போட்டுக் கரைத்துக் கொடுக்கவும்.

உப்பு, புளிப்பும் கைப்பு 21 நாள் காக்கவும். பிறகு உப்புப் புளி கூட்டவும். பத்தெட்டு முழுக்கு விளக்கெண்ணையிட்டுக் குளிர்ந்த தண்ணீரில் அடிக்கடி முழுகி வரவும். சூலை புண்ணுந்தீரும்.

### *24. கெந்தகத்தயிலம் சூலைக்கடுப்புக்கு*

சுத்தி பண்ணின கெந்தகம் பத்துவராகன் பசுவின் நெய் விட்டு ஒரு சாமமரைத்து வெள்ளீய சீலையில் தடவித் திரியாகச் சுருட்டி நெய்யிலே விளக்கெரிக்கத் தயிலம் விழும். அந்தத் தயிலம் விட்டுச் சுத்தியான இரசம் நாலு வராகன் ஒரு சாமமரைத்து ஒரு பரணியிலே இட்டு வைத்துக்கொண்டு காலையில் நாளொன்றுக்கு ஒரு காசிடைத் தயிலம் பத்து நாள்கொள்ளக் கடுப்பு முதலான வியாதி தீரும்.

**பத்தியம் :**

மதுர ஆகாரம், இந்தரசம் கூட்டிப் பத்தியத்துடனே நடக்கவும், உப்பு, புளி, எண்ணை, கைப்பு ஒரு மண்டலந் தீண்டாதிருக்கவும் தீரும்.

### 25. சூலைகுடாரம்

| | |
|---|---|
| செம்புப்பற்பம் | பதினாரு கழஞ்சு |
| கெந்தகம் | எட்டுக் கழஞ்சு |
| அப்பிரக சிந்தூரம் | நாற் கழஞ்சு |
| இரசம் | இரு கழஞ்சு |

இவையெல்லாம் எலும்பிச்சம் பழச்சாற்றிலே அரைத்து, வெய்யிலிலே உலர்த்திப்பனிப்பயரதின் பிரமாணம் இஞ்சிச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு கருப்புக்கட்டி இவைகளிடவும்.

### 26. சூலைக்கிடி மருந்து

செங்கத்தாரிப்பட்டை
வன்னிப்பட்டை
குப்பைமேனி
மணத்தக்காளி இலை
நொச்சியிலை
கழற்சிக்கொடி இலை
செருப்படி இலை
கோழி அவரை இலை
துளசி இலை

இவை எல்லாஞ் சாறு கொண்டு, சாறு வார்த்து இரண்டு வகைப் பட்டையும் இடித்துப் பதமான பிறகு இரசம் கழஞ்சு கூட விட்டு 1½ நாள் இடித்துப் பதமான பிறகு வாங்கி வைத்துக்கொண்டு தினம் நான்கு பணவிடைக்கொள்ளவும். ஆறு நாட்கள் காலை, மாலை இரண்டு நேரமும் கொள்ளவும். ஏழாம் நாள் விளக்கெண்ணை வார்த்துப் பொருக்கு மண் இட்டு முழுகிப் போடவும்.

**பத்தியம் :**

நெத்தோலி இருமுளி, முருங்கைஇலை கிள்ளுக்கீரை, ஈரவெங்காயம், பசுவின்பால், கைப்புப் புளிப்பு, உப்புக்

கூட்டாமல் இருக்கவும் தீரும். வெந்நீர் நடமாடவும். 7 நாளைக்கு மேல் வெந்நீர் விட்டு விடவும்.

### *27. பஞ்சாக்கினி சூலைக்கு*

புளி நரளைக் கிழங்கு
பிரண்டைக் கிழங்கு
கொடிவேலி வேர்
மருள் கிழங்கு
காட்டுக் கருனைக் கிழங்கு

இவை தன்னிலொக்க உலர்த்திப்பொடி பண்ணிப் புளித்த மோரிலே விடிவேறே முக்கழஞ்சு மருந்து போட்டுக் கலக்கிக் கொடுக்கவும்.

### *28. சூலை கடுப்புக்கு*

| | |
|---|---|
| கருநொச்சிலிலை | ஒரு பிடி |
| பொடுதலை | ஒரு பிடி |
| களச்சியிலை | ஒரு பிடி |
| எருக்கங் கொழுந்து | 3 |
| சிறு செந்தொட்டி | ஒரு பிடி |
| குப்பைமேனி | ஒரு பிடி |
| கையாந்தகரை | ஒரு பிடி |

இவை எல்லாம் இடித்துப் பொடி பண்ணிக் காலை, மாலை ஒன்பது நாள் கொடுக்கவும்.

**பத்தியம் :**

உப்புத் தவிரவும்.

### *29. சூலைக்குங், கடுப்புக்கும் எண்ணெய் வகை*

| | |
|---|---|
| ஆமணக்கெண்ணை | இருநாழி |
| கல்லுப்பு | இருநாழி |
| அரிதாரம் | 1 களஞ்சு |
| கெந்தகம் | 1 களஞ்சு |
| ரசம் | 1 களஞ்சு |

இதை உப்பிலே கலந்து உப்பைப் புதுச் சட்டியில் வைத்து ஒரு சட்டி கொண்டு மூடி சீலைமண் செய்து கரியாகும் அளவிற்கு அதை எரியிட்டுக் கரியாகச் சென்ற பின்பு அந்த எண்ணை இரு மொழி அதுக்குள்ளே விட்டுக் கொதிப்பித்து வடித்துக் கொள்ளவும். இந்த எண்ணையைத் தினம் ஒன்றுக்கு ஆழாக்கு உட்கொண்டு வரவும். வெந்நீர் பரிமாறவும். வெந்நீர் குளிக்கவும்.

### 30. குன்ம சூலைக்கு

| | |
|---|---|
| உள்ளி | குறுணி |
| ஆமணக்கெண்ணை | குறுணி |
| சிந்தாமணக்கெணஅணை | குறுணி |

பெருவாகை உள்ளில் நரம்பு
பெருங்குமிழ், புன்னை,
பாதிரி
சாறுவளை
சித்தமல்லி
பேர்மல்லி
சிறுவழுதலை
கண்டங்கத்தரி
நெருஞ்சில்
நிலவாமணக்கங்கிழங்கு
சிவதை வேர்
யாலறுவாயன்
மூக்கறட்டை
கொடிவேலிவேர் களருவாய்
ஆயிலப்பட்டை
புங்கம்பட்டை
முடக்கொத்தான் சமூலம்

இந்த மருந்து ஒவ்வொன்றும் முந்நாழி நெல்லிடைக் கூட்டி,

கடுக்காய் -50
தான்றிக்காய் -50

ஊறிய நெல்லிப் பருப்புக் கூட்டி, குறுணி ஆமணக்கெண்ணைக்கு இருகலத் தண்ணீரிலே இந்த வெட்டு மருந்துகள் இடித்துக் கஷாயமிட்டு எட்டொன்றாகக் காய்ச்சி எண்ணை கலந்து வெள்ளுள்ளி திரிதூணிப்பருப்பு, இதற்குப் 16 மரக்கால் நீர் வார்த்துக் கஷாயமிட்டுத் தூணியாகக் காய்ச்சி ஆயச்சீலையிலே தேயாமல் சாரத்தை வடித்துக்கொண்டு முந்தின கஷாயத்தில் கூட்டிக் குறுணிப் பசுவின் பால் கலந்து,

| | |
|---|---|
| பெருங்காயம் | பலம் 1 |
| கடுகு ரோகிணி | பலம் 1 |
| இந்துப்பு | பலம் 1 |
| காசிலவணம் | பலம் 1 |
| பிடலவணம் | பலம் 1 |
| சைந்தவ லவணம் | பலம் 1 |
| சுவர்சலவணம் | பலம் 1 |
| சத்தியவட்சாரம் | 4 காசியிடை |
| யலட்சாரம் | ,, |
| சுக்கு | ,, |
| முளகு | ,, |
| திப்பிலி | ,, |
| அசமதாகம் | ,, |
| திப்பிலி மூலம் | ,, |
| செவியம் | ,, |
| சிற்றரத்தை | ,, |
| பேரரத்தை | ,, |

கூட்டிப் பசுவின் பால் வார்த்த்ரைத்துப் பக்குவத்திலே எண்ணை வடித்துக் கொள்ளவும். தினந்தோறும் 4 காசிடை எண்ணை நக்கவும். உதரத்திலே பிறந்த வியாதிகள் எல்லாம் நிற்கும்.

கஷாயமும் மருந்தும் எண்ணையுங் கூட்டிக் காயுறபோது, இருநாழி எண்ணை மீட்டு, உழக்கு சதிரக்கள்ளிப்பால் வார்த்தரைத்து எண்ணை செய்து ஒரு காசத்தனை எண்ணைப் பசுவின் பாலில் கூட்டி நக்க விரோசிக்கும். **மாத்து:** மோரும், சோறும் அசனம் பண்ண நிற்கும்.

தள்ளினால் நெல்லிப் பருப்பு மோரிலே அரைத்துக் கொடுக்க நிற்கும்.

வாதசூலை, குன்மம், அருவை, கவிசை, நீராமை, வல்லை மற்றும் வயிற்றில் பிறந்த வியாதிகளெல்லாம் நிற்கும். இப்படி உள்ளி ஆமண்ணை விடவும்.

அருவை, கவிசை, எதிரக் கவிசை, நீராமை, உள்நீர்க்கோவை, பிறநீர்க்கோவை, நீர்க்கோவை வலம் மகோதரம், சலமகோதரம், ஆணாகம், பெண்ணாகம், குளுப்பை, பெருவயிறு, காமாலை, விஷப்பாகம், நாகப்பாம்பு, குன்மம், வயத்திலே எத்தனை வியாதி உண்டோ அத்தனையுந் தீரும்.

### *31. சூலை குன்மங்களுக்குப் பாவட்டை எண்ணெய்*

| | |
|---|---|
| பாவட்டைச்சாறு | நாழி |
| வெள்ளுள்ளிச் சாறு | நாழி |
| கொட்டைக்கரந்தைச் சாறு | நாழி |
| கொத்தான் சாறு | நாழி |
| ஆடாதொடைச் சாறு | நாழி |
| கொடிகழற்சாறு | நாவி |
| உரிபாவட்டைவேர் | 2 கழஞ்சி |

அரைத்துக் கரைத்து ஆமணக்கெண்ணெய் இருநாழி புகட்டிப் பதத்தில் வடித்து நக்கவும். சூலை, குன்மம், குடல்வாதம், இவை தீரும்.

### 32. குன்ம சூலைக்கு மெதுக்கொள்ள

| | |
|---|---|
| பெருங்காயம் | 1 பங்கு |
| வசம்பு | 2 பங்கு |
| கொடிவேலி | 4 பங்கு |
| அசமதாகம் | 5 பங்கு |
| கடுக்காய் | 6 பங்கு |
| திப்பிலி | 7 பங்கு |
| கோட்டம் | 8 பங்கு |
| மிளகு | 9 பங்கு |
| சிவதைவேர் | 10 பங்கு |

இவை எல்லாங் கூட்டி வேக கொட்டிற் கொண்டு பொடி செய்து, வஸ்திரகாயம் செய்து வெருகடிப் பிறமாணம் நெய்யிலாகுதல் இளவெந்நீராகுதல் கொள்ளவும். சுவாசகாசம், மந்தாக்கினி, க்ஷயபாண்டு, விரேசனம், குன்ம சூலை இத்தனையும் போக்கும்.

### 33. கபால சூலை-தலைவலி-பிடரிகனப்பு-ஒருத்தலைவலிக்கு

கபாலசூலை, தலைவலி, பிடரிகனப்புக்கு அரிதாரம், சுக்கு, இலுப்பை, பிண்ணாக்கு, மஞ்சள், இவை பொடி செய்து வேலிப்பருத்திச்சாறு சிலையிலூட்டி நிழலுலர்த்தாக உலர்த்தி, உலர்ந்த சிலையுடன் சரியாகக் கடுதாசி கூட்டிப் பொடியைச் சீலையிலுங் கடுதாசியிலுமூட்டித் திரித்துப் புகை இடவும், இதற்குத் தலைவலி, கபாலசூலை, தலைக்கனப்பு, நாசியடைப்பு, தண்ணீர் விழுகிறது. இது வெல்லாந் தீரும்.

### 34. ஒருத் தலைவலிக்கு

மாடப்புறாவினெச்சம் பொடி பண்ணித் தேய்க்கவும் தீரும். பச்சைக்கடுகு அரைத்து நல்லெண்ணெயில் குழப்பித் தேய்க்கவும்.

### 35. மண்டை சூலைக்கும், சுாமாலைக்கும் மருந்து

பொடுதலைச் சாறு
நல்லெண்ணெய்
மிளகு

பொடி பண்ணிக் கூடப்போட்டு 7 நாள் கொடுக்கக் குணமாம்.

**பத்தியம் :**

உப்புப்புளி ஆகாது. கை கண்டது.

### 36. புகை மருந்து (சூலை ஒட்டிய புண் முதலானதுக்கு)

| | |
|---|---|
| பச்சை நாபி | |
| வெள்ளைப் பாஷாணம் | பலம் ¼ |
| கெவுரிப் பாஷாணம் | பலம் ¼ |
| தொட்டிப் பாஷாணம் | பலம் ½ |
| வங்காளப்பச்சை | பலம் ½ |
| சாதிலிங்கம் | பலம் ½ |
| அரிதாரம் | பலம் ½ |
| சீனக்காரம் | பலம் ½ |
| நெடி நமட்சாரம் | பலம் ½ |
| யவட்சாரம் | பலம் ½ |
| மிருதார் சிங்கி | பலம் ½ |
| அஞ்சனக்கல்லு | பலம் ½ |
| கருங்குலியம் | பலம் 1 |
| காந்தம் | பலம் ½ |
| காரீயம் | பலம் 3 |
| கெருடபச்சை | பலம் ½ |

ஈயம் விளக்கெண்ணெய் விட்டு உருக்குகிறபோது ரசம் விராகனிடை விட்டு உருக்கித் தரையில் சாய்க்கிறது. இதுவும் மருந்துகளும் கூட்டி எருக்கம்பால் வார்த்தரைத்து ஒன்பது பங்கிட்டுச் சீலையிலெருக்கம் பாலூட்டி ஒன்பது பங்காக முடிந்து ஆறு புகை 3 நாளைக்கிப் புளியஞ்சிராய்

தணலில் புகை போடவும். அன்றைக்குத் தீராதிருக்கும். மறுநாள் நோய் கெடும். மூன்றாம் நாள் நோய் தீரும். ஒரு நாள் ஆறவிட்டு ஐந்தாம் நாள் விளக்கெண்ணெய் விட்டு முழுகவும்.

**பத்தியம் :**

ஆறின சோறும், தண்ணீர், வெங்காயம் கூட்டி அசனம் பண்ணவும்.

**முழுகின பின்பு பத்தியம் :**

நெய் தோலிக் கருவாடு, சுறாக்கருவாடு, வெள்ளாட்டு உப்புக் கண்டம் ஆகும். புளி, மிளகு, உப்பு ஆகாது.

இது இரண்டு நேரமும் முழுகவும். முழுகச் சத்துவமில்லை என்றால் தண்ணீரெடுத்து விடவும்.

**இதுக்குத்தீரும் வியாதி :**

சூலை, ஒட்டிய புண், வாதசூலை, அண்டவாதம், திமிர்வாதம், தினவுள்ள வெள்ளைக் குஷ்டம், கருங்குஷ்டம், மண்டைசூலை, செவ்வட்டைக்கடி, கடிகைசீழ்க் கட்டினது, பிளவை, தண்டுப்பிளவை, காணாக்கடி இவை எல்லாந் தீரும்.

15 நாளைக்குச் சுடுசோறும், வெந்நீரும் ஆகாது. புகை அமட்டினால் பசுவின் பச்சைபயிறு கஞ்சி காய்ச்சிக் குடிக்கவும். அறவே அமட்டினால் நறுவளிக் கொழுந்து அரைத்து எருமைத் தயிரில் கொடுக்கவும்.

### 37. சூலை வியாதிக்குச் சுரசம்

இரசம் பலம் 1
வெள்ளைப்பாஷாணம் பலம் 1
அதிமதுரம்
களிப்பாக்கு
கீழாநெல்லிவேர் இவை சமன் கூட்டி அரைத்து 7 உருண்டைகளாக்கிப் புளியஞ்சிராய்த் தணலிலாவது கொட்டாங்கச்சித் தணலிலாவது 3 நாள் புகைக்கவும்.

### 38. வாதசூலைக்கு சந்துவாத கரப்பானுக்கு வேதுபிடிக்க

அடப்பம்பட்டை
பிரப்பங் கிழங்கு
வெள்ளறுகு
சங்கம் வேர்
மாவிலங்கம் பட்டை
அழிஞ்சில் வேர்
கோவைத் தண்டு
முதியார் கூந்தல்
இலுப்பைப்பட்டை

வெட்டு மருந்து இந்த ஒன்பது வகையும் சமன் கூட்டி நறுக்கிப் பிடித்துப் பானையில் இட்டுக் காய்ச்சி வேது பிடிக்கவும். ஆறிப்போனால் செங்கல் காயப்போட்டு அந்தப் பானையிற் போட்டுப் பிடிக்கவும்.

**இதுக்குத் தீரும் வியாதி :**

வாதசூலை, வாதகரப்பான், சூலைக்கடுப்பு, சுறோணிதக் கடுப்புத் தீரும். கை கண்டது.

### 39. வாதசூலைப்புண், ஆறாதபுண், கடிவிஷம், பிளவைக்கு

உசிலம்பட்டையை கொண்டு வந்து காயப்போட்டு, இடித்து வஸ்திர காயம் செய்து தினம் வெருகடிப் பிரமாணம் 10 நாள் கொள்ளவும், கைப்புப்புளிப்புத் தவிரவும்.

### வேறு

நீர்க்கோவையை வெள்ளாட்டுக் கோமியத்திலொரு பாக்களவு கய்ச்சிக் கொடுக்கவும். ஒருநாள் விட்டு ஒருநாள் கொடுக்கவும். கைப்புப் புளிப்புத் தவிரவும்.

### 40. வாதசூலை முதலானதுக்கு, கெந்தகச் சூரணம்

கெந்தகம் சுத்தி பண்ணினது பலம் 3 **சுக்கு**, திப்பிலி, மூலம், செவியம், சித்திர மூலம், ஏலம், இல**வங்கம் பத்**திரி,

இலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, இரும்பு, ஓமம், சாதிக்காய், சாதிப்பத்திரி, மிளகு, தேவதாரம், சித்திரத்தை, கோஷ்டம், விளங்கம், சிறுதேக்கு, தாளிசப் பத்திரி வகைக்குப் பலம், சங்கு, வெள்ளறுகு, சிவனார்வேம்பு, செங்கத்தாரி, மிளகரணை, பொன்முசுட்டை, ஊசி மல்லிகை, அமுக்கிறா, சத்திச் சாரணை, பிரப்பங் கிழங்கு பலம் - 1, பரங்கிப்பட்டை பலம்-1, இவையெல்லாம் இடித்து வஸ்த்திர காயம் செய்து வெருகடிப் பிரமாணம் இரண்டு நேரமுங் கொள்ளத் தீரும் வியாதி வாத சீலை, மேக சூலை, வெடி சூலை, கபால சூலை, பிரமேக மூத்திரக்கிரிச்சம், புண் குடோரம், புண் குஷ்டம், விஷக்கடி, வண்டு கடி, சொரி இவை எல்லாந் தீரும். இரச முறிவு, ரசக்கட்டு, இரசவெறி இவையெல்லாந் தீரும்.

**பத்தியம் :**

முளைக்கீரை, துவரம் பருப்பு, மிளகுள்ளி, பசுவின் நெய், வெள்ளாட்டுப் பாலிது கூட்டவும்.

### *41. கெந்தகச் சூரணம்*

இலுப்பைப்பூ, இலுப்பை நெய், இலுப்பைக்கடி, வாழைக்காய், வாழை இலை வாழைப்பூ இதுகள் சமூலமொரு மண்டலத்துக்காகாது. மருந்து அரைமண்டலந் தின்றால் அரை மண்டலம், மறு பத்தியம், உப்பு, புளிப்பு, புகையிலைத் தள்ளவும்.

### *42. பக்க சூலைக்கு*

கழல் சதை
கண்டங்கத்திரிவேர்
அசமதாகம்
சீரகம்
சாறுவளைவேர்
வசம்பு
உள்ளி

இவைகளை அரைத்து வெந்நீரில் கொடுக்கப் பக்க சூலை நிற்கும்.

### 43. வேறு

| | |
|---|---|
| வெள்ளுள்ளி | 100 பலம் |
| சுக்கு | 1 பலம் |
| மிளகு | 1 பலம் |
| திப்பிலி | 1 பலம் |
| பெருங்காயம் | 1 பலம் |
| சத்தியவட்சாரம் | 1 பலம் |
| யவட்சாரம் | 1 பலம் |
| திப்பிலிமூலம் | 1 பலம் |
| சாதிக்காய் | 1 பலம் |
| கோரையரிசி | 1 பலம் |
| சதகுப்பை | 1 பலம் |
| கழல்பருப்பு | 1 பலம் |
| பஞ்சலவணம் | 1 பலம் |
| அசமதாகம் | 1 பலம் |
| கடுகு | 1 பலம் |

இந்த மருந்துகளுடன் எள்ளு உழக்குக் கூட்டி இது எல்லாம் பொடி செய்து வெள்ளுள்ளித் திரியரைத்து கலந்து எண்ணெய் உரி, பசுவின் நெய் உரி கலந்து கடுகாகப் பண்ணிக் காலமே வெந்நீரில் களிப்பாக்களவு கொள்ளப் பக்கசூலை, சுவாச காசமும் நிற்கும்.

### 44. பக்கசூலை வாய்வுக்குக் கெந்தகச் சூரணம்

| | |
|---|---|
| நல்ல உப்பு | பலம் 1 |
| கெந்தகம் | பலம் ½ |

உப்பையார்க்கப் பொடி பண்ணி கரண்டியிலிட்டு அரைப்பலம் கெந்தகத்தையும் பொடி பண்ணிக் கூடக் கோத்துருக்கி இரும்புக் கழியாலே கிண்டி கலுவத்திலே வைத்துப் பொடிபண்ணி வேளைக்கு ½ வராகனிடை மோரிலனுபான விஷேத்தில் கொடுக்கவும். பக்கசூலை வாய்வும் தீரும்.

## 45. கரச்சூலைகருக்காயம்

காயம்
ஆயில்
கூவளை
கடுக்காய்
விலாலரிசி
வேர்க்கொமட்டி
திப்பிலி
மஞ்சள்

ஓரொன்று பலமுள்ள பேர்க்குக் களஞ்சு, பலங்கெட்ட பேர்க்கு ½ கழஞ்சு கொண்டு அரைத்துக் கரைத்துக் கஷாயமாகக் காய்ச்சிக் கொடுக்கவும்.

கொன்றை கொடுவேலாயில் கூவளை சாரணை பலம் 5 கடுக்காய், சுக்குத் திப்பிலி, மிளகு, கடுகுரோகணி, நேர்வாளம், இந்துப்பு, உள்ளி பலம் 3. மற்றுள சரக்குப் பலம் 2. கூட்டி சித்தாமணக்கெண்ணையில் வடித்து தர நச்சுச்சூலை தீரும். மஞ்சள் சுட்டுப் பொடி செய்து மேல் பொடியிட்டுக் கொள்ளவும். சீராம் கைகண்டது.

## 46. நிதம்ப சூலைக்கு மருந்து

| | |
|---|---|
| முடக்கத்தான் சாறு உரி | |
| நல்லெண்ணை உரி | |
| வேர்கொம்புள்ளி | ½ கழஞ்சு |
| வசம்பு | ½ கழஞ்சு |
| பெருங்காயம் | ½ கழஞ்சு |
| கடுகு | ½ கழஞ்சு |
| இந்துப்பு | ½ கழஞ்சு |
| கன்னசாலை | ½ கவஞ்சு |
| குந்திருக்கம் | ½ கழஞ்சு |
| தேவதாரம் | ½ கழஞ்சு |
| சதகுப்பை | ½ கழஞ்சு |

கொண்டரைத்துக் கரைத்து மெழுகுப் பதமாக வடித்து ஒன்றரைச் சிரங்கை நக்கிவர நிதம்பசூலை தீரும்.

### 47. யோனி சூலைக்குச் சூரணம்

| | |
|---|---|
| இந்துப்பு | 1 பணவிடை |
| நற்சீரகம் | 2 கழஞ்சு |
| சுக்கு | 1 கழஞ்சு |
| திப்பிலி | 4 கழஞ்சு |
| கடுக்காய் | 8 கழஞ்சு |

இது பொடி செய்து ஒரு குத்துப்பொடி மோரில் கொடுக்கவும். இதுக்குத் தீரும் வியாதி, யோனிசூலை, வாதகுன்மம், பிடரிவலி, வயிற்றுப் பொருமல், குடல்வாதம் விக்கல் இவையெல்லாம் தீரும்.

**பத்தியம் :**

கைப்புப் புளிப்பு விடவும்.

### 48. காசச்சூலைக்குக் கஷாயம்

கூவளை
கொடிவேலிவேர்
கடுக்காய்
விழலரிசி
வேர்க்கொம்பு
திப்பிலி
மஞ்சள்

இவை ஓரொன்று பலமுள்ள பேர்க்குக் கழஞ்சு, பலங்கெட்ட பேர்க்கு ½ கழஞ்சு கொண்டு அரைத்துக் கரைத்துக் கஷாயமாகக் காய்ச்சிக் கொடுக்கவும்.

### 49. சூலைக்கட்டுக்கு கைகால் குடைச்சலுக்கு மருந்து

உளுந்தினுன் மாவு
நிலைப்பனைக்கிழங்கு

சர்க்கரை இவை பசுவின் பாலில் கலந்து கொள்ளவும். இச்சாபத்தியம் இதற்குக் கைகால் குடைச்சல் சூலைக்கட்டு இவை தீரும்.

### 50. சூலைவாய்வுக்கு மருந்து

| | |
|---|---|
| கெந்தகம் | 5 விராகன் |
| சூதம் | 3 விராகன் |

கெந்தகம் முன்னே உருகும் பொழுது 3 விராகனிடை ரசத்தையுங் கூட விட்டுக் குப்பைமேனிச்சாறு நாலுதுளி விட்டு வேப்பங்கழியாலே கடைந்து சூலை இலையில் சாய்த்துப் பொடி செய்து அனுபான விசேஷத்தில் கொடுக்கவும். சூலை வாய்வு சகலமுந் தீரும்.

### 51. முடங்கு சூலைக்கு மருந்து

| | |
|---|---|
| நல்ல வேம்பு | 6 பலம் |
| மலை வேம்பு | 6 பலம் |
| சிவனார் வேம்பு | 6 பலம் |
| நிலவேம்பு | 6 பலம் |
| கருவேப்பிலை | 6 பலம் |

இது சேரக் காயப்போட்டு இடித்து வடிகட்டிச் சூரணம் பண்ணி வெருகடிப் பிரமாணந் தின்று, வெந்நீர் குடிக்கவும். இப்படி 24 நாட்கள் குடிக்கவும்.

**பத்தியம் :**

புளி, புகை தவிர்க்கவும்.

### 52. வெள்ளைவாகடத்தில் சூலைக்கடுப்பு, பரங்கிப் புண்ணுக்கு

நாள்பட்ட வேப்பமரத்தின் பட்டை 20 பலம் வெட்டிச் சிறுகச் சிறுகத் தரிச்சிப்பஞ்சு போலே இடித்து மூன்று மரக்கால் தண்ணீர் விட்டு 5 நாள் சூரியப்பிடத்திலே வைத்துப் பிசைந்து பிழிந்து வடித்து நாலொன்றாகக் காய்ச்சி இதில்

நெய்யிருநாழி, வேப்பெண்ணெய் நாழி, பச்சை வெற்றிலை மணத்தக்காளி நொச்சி வேலிப்பருத்தி, தையவேளை முடக்கொற்றான், குப்பைமேனி இந்தச் சாறுகளிலே ஓரொன்று உரிவிட்டுச் சிவனார் வேம்பு, சிறுகுருஞ்சி, பெருமருந்து, துளசி, நொச்சி, தைய வேளை, நாரத்தை, அழிஞ்சில், காட்டு மல்லிகை, தூதுவளை, வேலிப்பருத்தி, செங்கத்தாரி, முடக்கொத்தான் செருப்படி, குப்பைமேனி, சாரணை ஓரொன்று வோர் கழஞ்சுப் பால்விட்டரைத்து வெண்காரம், சீரகம், ஓமம், சதகுப்பை, வெள்ளுள்ளி, சீனக்காரம், குடசப்பாலை, பூதவிருட்சம், காசுக்கட்டி, குங்கிலியம், செண்பக மொட்டு ஓரொன்று ஒன்றரை விராகன் கூட்டிக் களிப்பாக்குப் பத்தும் சேர் எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து நெய்யிலெரியிட்டுக்குக்குலுச் சுத்தியானது அஞ்சு கழஞ்சு, இரசம் இரண்டு கழஞ்சு, கெந்தகம் 2 கழஞ்சு, கெவுரி கால் கழஞ்சு, துருசு கழஞ்சு இதை எலுமிச்சம் பழச்சாறு விட்டு மைபோலே அரைத்து வடித்த கிருதம், ஆறவிட்டு அதில் கூடக் கலந்து மூன்றுநாள் சென்ற பிறகு இரண்டு நேரமும் கொண்டு வரப் பரங்கிச் சூலை தீரும். ஒரு மண்டலங் கொள்ளவும். உப்புப் புளி, எண்ணெய், கைப்புத் தவிர்த்து பத்தியத்திலே வரவும்.

## 53. வேறு

இரசங்கழஞ்சு

சாதிலிங்கம் இருகழஞ்சு

கெந்தகம் நாற்கழஞ்சு, இந்த மூன்றும் கல்வத்திலிட்டுப் பொடி பண்ணி நாழிப் பசுவின் நெய்யில் சிறுகச் சிறுக விட்டு அரைத்து நெய்யெடுத்துக்கொண்டு இரண்டு நாள் ஆறவிட்டு உடம்பிலே தடவினால் வேர்வை எடுக்கும். வேர்வை எடுக்க மட்டும் வாட்டி மாலையில் வெந்நீரில் குளிக்கவும். இந்தப்படி ஆறுமட்டும் பண்ணிவரத் தீரும்.

## 54. இருது சூலைக்கு எண்ணெய்

சவுட்டுமண்படி

ஒரு சட்டியில் வேறே ஊறப்போட்டு, ஒட்டடை ஒருபடிவேறே ஊறப்போட்டு, இவை இரண்டு வகையும் வேறே. வேறே மேலிருக்கிற தெளிவை இறுத்திக் கொண்டு, காசிடை

| | |
|---|---|
| சுண்ணாம்பு | |
| பெருங்காயம் காசிடை | 1 |
| ஒரு வெள்ளைப்பூண்டு | |
| இலுப்பைக்கட்டி காசிடை | 1 |
| நல்லெண்ணெய் சேர் | ¼ |
| பூவரசுவேர் சேர் | ¼ |

கலந்து வீட்டுக்குப் பிறம்போன மூன்று நாளுங் குடித்தால் மலட்டுப் புழு இறந்துவிழும். சந்தானமுண்டாகும்.

### 55. சூலைகடுப்பு-இடுப்புவலி-முதலான வியாதிக்குப் பறங்கிப்பட்டைச் சூரணம்

பறங்கிப்பட்டைச் சூரணம் பண்ணி அந்த நிறைக்குச்சரி சுக்கு, மிளகு, திப்பிலி மூலம் தும்பிராஷ்டம். இது சரி எடை சூரணம்பண்ணி இரண்டு சூரணமும் கலந்து காலமே தேனில்க் கொள்ள இடுப்பு வலியுந் தீர்ந்து உடம்பு புஷ்டியாயிருக்கும்.

### 56. வெள்ளைப் பொடி 18 காசத்துக்கும் பலநசலுக்கும் மருந்து

| | |
|---|---|
| துருசு விராகன் | 2 |
| வெள்ளைக் காகணம் வேர் | விராகன் - = 2 |
| ஆணிதள்ளி வேர்ப்பட்டை | விராகன் - = 2 |
| சிறுக்கீரைவேர் | விராகன் - = 2 |
| ஓரிலைத்தாமரை வேர் | விராகன் - = 2 |

இவை எல்லாந் தண்ணீர் வார்த்தரைத்துச் சட்டியிலே அடைபோலே தட்டி மறுசட்டி கொண்டு மூடி அடுப்பிலேவைத்து ஒரு சாமம் நன்றாக எரியிட்டுப் பார்க்கத் திருநீராய் வெண்மையுண்டாம். அதை எடுத்துப் பரணியிலே அடைத்து வைத்துக்கொண்டு நிமை பிரட்டி மருந்திடவும்.

இதுக்குத் தீரும் வியாதி, நத்தை படலம், பாலாடைக்காசம், காசம், முழிமுழுங்கி பூப்பட்டது, ஆணிப்பூ, குந்தம், சதை வளர்த்தி அமரன் 18 வகை காசமே படர் நாசமே.

### 57. காசமிருமலுக்குத் தூதுவளை எண்ணெய்

தூதுவளைச்சமூலம், திருத்துழாய்ச் சமூலம், கங்கரங்கோரைச் சமூலம், இசங்கு சமூலம், இண்டிலை, கழக்கொடியிலை, இன்பூராவேர், தூதுவளைப்பழ நாழியில் வேக, அரைத்துக்கரைத்துத் திப்பிலி, பூதகரப்பான் இந்துப்பு இவை எண்ணெயிற் கூட்டிப் பண்ணி நக்க இருமல், க்ஷயரோகந்தீரும்.

### 58. சுவாசகாச இருமலுக்கு மருந்து

முள்ளுக்கத்திரி வேர்ப்பட்டை அரைத்து வைத்துக்கொண்டு வெருகடித்தூள் நானாழி நீரில் கஷாயமிட்டு, ஒரு சிறங்கையானவாறேயிருந்து வெண்காரம் பொரித்து பணவிடைத்தூள் தூவிக்கொடுக்கவும். சுவாசகாசம், இருமல் தீரும். கைகண்டது.

### 59. குண்டலியாதி லேகியம் காச சுவாச முதலான பலரோகத்துக்கு

| | |
|---|---|
| தான்றிக்காய் | 2 பலம் |
| நெல்லிப்பருப்பு | 2 பலம் |
| சாதிக்காய் | 2 பலம் |

இவை எல்லாஞ் சூரணம் பண்ணி லேகியத்திற் கலந்து தேன் காய்ச்சிக் குளிர ஆறவிட்டுத் தேன் படி-1 கலந்து, சர்க்கரை பலம் 16 கலக்கவும். இந்த லேகியம் இரண்டு நேரமுங் கொள்ளவும். காசசுவாசம், சோகை சூலை, ருத்திர ரோகம், விக்கல், குன்மம் பீலிகை, மகோதரம், கிராணி, அலோரி, ஆமறுபயித்தியம், சிலேஷ்மம், சுவாசகாசம், க்ஷயம் முதலான ரோகந்தீரும்.

### 60. தாளகபற்பம் சுவாசத்துக்கு

தாளக பற்பங் கோவைச் சர்க்கரை பலம்-2. தாளகம்-பலம் 2. வெற்றிலைக்காம்புச் சாற்றில் பத்து நாழிகை அரைத்து வில்லைப் படித்து உலர்த்திக் காகிதத்தில் வைத்துச் சுருட்டி அதன் மேல் புளியம் பிறாணி சாம்பல் குழைத்து மூன்று திரம் பூசி அதன் மேல் நாலு சீலை மண் செய்து முழக்குழி வெட்டி எருவாக்கி அதன்மேல் வைத்து மேலும் எருவடுக்கிப் புடமிடவும், பஸ்பமாகும். ஆறவிட்டெடுத்து வாத சுவாச காசத்துக்குத் தேனிலிடவும். தீரும்.

### 61. சுவாச காசத்துக்கு மருந்து

ஆடாதொடை, சங்கிலி, தூதுவளை, முருங்கிலை இந்த நாலிலையும் சமனாகப் பிட்டு வைத்துப் பிழிந்து, இறுத்துக்கொண்டு சுக்கு, திப்பிலி, மிளகு மூன்றும் சமனாய்ப் பொடி பண்ணி வெருகடிப் பிரமாணம் அந்தச்சாற்றிலிட்டு நாலு துளி, அஞ்சு துளித் தேன்விட்டுச் சாப்பிடுகிறது. சுவாச காசங்கள் தீரும். கை கண்டது.

### 62. சுவாச காசத்துக்கு, அஷ்தி சுரத்துக்கு, இருமலுக்கு தாளீசச் சூரணம்

தாளீசபத்திரி - திரிகடுகு
இருசீரகம்-ஓமம்-அறத்தை
இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி
சிறுநாகப்பூ, பெருநாகப்பூ
கிராம்பு, ஏலம்
சாதிக்காய், கடுக்காய்
தான்றிக்காய், சந்தனம், வெட்டிவேர்,
இலாமிச்சம்வேர்

இவை கூட்டிச் சூரணஞ் செய்து சர்க்கரை, தேன் கலந்து கொள்ளவும். இதற்குத் தீரும் வியாதி அஸ்திசுரம், இருமல், சுவாசம் இவை தீரும். கை கண்டது.

### 63. சுவாசகாசத்துக்கு

பசுவின் நெய்படி 1
ஆடாதொடைச் சாறுபடி 1/8
கண்டங்கத்திரி சமூலமுந்துவைச்ச சாறுபடி 1/8
முள்ளிஇலைச்சாறு 1/8
கையாந்தகரைச்சாறு படி 1/8
சீந்திக்கொடிசாறுபடி 1/8
சாறணை இலைச்சாறுபடி 1/8
நொச்சி இலைச்சாறுபடி 1/8
பிரண்டை வாட்டிய சாறுபடி 1/8

நெய்யில் கலந்து பதமாய்க் காய்ச்சி, இறக்கி ½ பலஞ் சீனியுங் சங்கம் வேர்ப்பட்டை பொடியுந் தூதுவளை வேர்ப்பட்டைப் பொடியு முக்கால் பலங்கூட்டி நாளொன்றுக்கு உள்ளங்கை கொண்ட நெய்யுள்ளுக்குக் கொள்ளவும். உப்புக் கூட்டவும். மறுபத்தியம் பிடிக்கவும். தீரும் வியாதி.

சுவாசகாசம், ஈளைஇருமல் எந்த வியாதியிலெடுத்த இளைப்புந் தீரும்.

### 64. காச சுவாசமுன்பட்டதுக்கு தசமூல நெய்சுரசம்

| | |
|---|---|
| பெருவாகை | பலம் 4 |
| பெருங்குமிழ் | பலம் 4 |
| முன்னைபாதிரி | பலம் 4 |
| வில்வங் கண்டங்கத்திரி | பலம் 4 |
| சுருவமுதலை | பலம் 4 |
| நெருஞ்சில் | பலம் 4 |

சிற்றமல்லி பேர்மல்லி இரண்டு சமூலம், நாலு பலமாக எட்டுப்பலம் இது சேர் பிடித்து நாலு மரக்கால் நார்விட்டு, நாலுபடியாகக் காய்ச்சி, இறுத்து நாழி நெய்விட்டுத் திரிகடுகு, திரிபலை, ஏலம், கோஷ்டம், இந்துப்பு, விளலரிசி, வாலுளுவையரிசி, சவ்வச்சலங்கம், ஓமம் இது ஒன்று கழஞ்சு அரைத்து மூன்று நாள் கொதிவிட்டு நாலாநாள் வடித்து இரண்டு காசிடை கொண்டுவர சுவாசகாசம்,

மார்பிலுழைப்பு, மார்பிலிடிப்பு, நெஞ்சுக்கட்டு, குன்ம், கிறாணி தீரும், இதில் ஆனந்த வயிரவம் ஒரு குண்டு மணியிடை கிருதத்திலிட்டு வர நல்லது.

## 65. காச சுவாசம், பாண்டுகாமாலை உள்பட்ட வியாதிக்கு தாளீச வடகம்

| | |
|---|---|
| தாளீசபத்திரி | 2 பங்கு |
| சுக்கு | 2 பங்கு |
| திப்பிலி | 2 பங்கு |
| செவ்வியம் | 2 பங்கு |
| திரிபலை | 1 பங்கு |
| திப்பிலிமூலம் | 1 பங்கு |
| மிளகு | 1 பங்கு |
| ஏலம் | 1 பங்கு |
| பச்சிலை | 1 பங்கு |
| நாகப்பூ | 1 பங்கு |
| வெல்லம் | 40 பங்கு |

தண்ணீரில் கரைத்து வடித்துக்கொண்டு அடுப்பிலேற்றிப் பாகாகக் காய்ச்சி அதிலே, புளியஞ்சிறாய் சுட்ட சாம்பல் பத்துப் பங்கு போட்டுக் காய்ச்சிக் குளம்பாகிற பக்குவமாகக் கிளறி மூன்று, காசிடையிலே உருண்டை பண்ணிக் காலமே கொள்ள காசம், சுவாசம், பாண்டு, காமாலை மேல்மூச்சு, மருத்தீடு மந்தாக்கினி, வெப்புப்பாவை இவை முதலானவை ஒரு மண்டலங் கொள்ளத் தீரும்.

கையாந்தகரை, தூதுவளை, ஆடாதொடை, சங்கு, சுழலாவாரை இந்த அஞ்சிலைச் சாறும் ஒரொன்று நாழியாகக் கூட்டி நெய் உரி, எண்ணெய் உரி, கடுக்காய் நூறு (100) இடித்துப் பொடியும் பழவெல்லம் 20 பலம் சேர ஒன்றாகக் கூட்டித் திப்பிலி, சிறுதேக்கு, செவ்வியம், கொடிவேலி, அதிவிடயம், சுக்கு, சீரகம், பொன்முசுட்டை வேர், பெருங்காயம், அரேணுகம், பெருங்குரும்பை, வெண்கடுகு, மிலகு, கடுகுரோகணி, குங்கிலியம், சுழலாவாரை, ஓமம், ஏலம், திப்பிலிமூலம் வாய்விளங்கம் ஓரொன்று ஒரு கழஞ்சு

கூட்டிச் சூரணம் பண்ணி அரைப்பொடி பலம்½ இது சேர் இட்டு மந்தாக்கினியிலே குழம்பாகிற பக்குவத்திலே இறக்கி ஒரு நாள் ஆறப்போட்டு 15 நாள் தானிய புடத்தில் வைத்து எடுத்து ஒரு கொட்டைப்பாக்கு மருவாதி ஒரு மண்டலங்கொள்ள ஈளை இருமல், சுவாசகாசம் இவையெல்லாந் தீரும். கைப்புப் புளிப்பு விட்டு, பசுவின் பால், வெள்ளாட்டுப்பால், பசுவின்நெய், துவரம் பருப்பு, முருங்கையிலைப்பிஞ்சு, புடலங்காய், காடை, கவுதாரி, வெள்ளாட்டு பத்தியமிட்டு வரவும்.

### 67. சுவாசத்துக்குக் குடிநீர்

சிறுவழுதலைவேர், ஆடாதொடைஇலை, தேள்கொடுக்கு, சீந்தில்தண்டு, சிறுதேக்கு, சுக்கு, சங்கிலை, பேராம்பிலை, கூட்டி இருநாழி நீர் வார்த்து உழக்காகக் காய்ச்சித் தேனும் திப்பிலியுங் கூட்டிக் கொடுக்கவும். சுவாசகாசம் நிற்கும்.

### 68. சுவாசகாசத்துக்கு

வெள்ளைக் குங்கிலியம் பொடி செய்து சாறுவேளை வேரும், உள்ளியும், வசம்பும், நறுக்கி நல்ல எண்ணெய் பண்ணி இடச்சுவாசகாசம் நிற்கும்.

### 69. காசசுவாசகிருதம்

மிளகரணைவேர், பொரிம்பில் வேர், சங்கம்வேர், கடுநெல்லி, தான்றிமஞ்சள், சாறுவேளைவேர், ஆடாதொடை வேர், நொச்சில் வேர், ஆக 11 மருந்தும் மூன்று பலமாக முப்பத்துமூன்று பலமும், பெருவாகை, பெருங்குமிழ், முன்னை, பாதிரி, கூவளை, சித்தமல்லி, பேர்மல்லி, சிறுவழுதளைவேர், கண்டங்கத்திரி, நெருஞ்சில், இவை ஒரொன்று இரண்டு பலம் ஆகப்பலம் 66 பலமும் மாவிலங்கை வேர், செம்முள்ளிவேர், தண்ணீர் முட்டான் கிழங்கு, கொடிவேலிவேர், விழுதிவேர், களார், ஆயில், புங்கு, தழுதாழைவேர், புன்னை, மூக்கரத்தை வேர், நாணல்,

